தமிழலங்காரம் பாட்டும் கருத்தும்



# முப்பெரு விழா

**மருதமலை திரு அருணகிரிநாதர்**

**அருள்நெறி கிருத்திகைக் கழகம்**

**41-வது ஆண்டு நிறைவு விழா**

**34-வது ஆண்டு படித் திருவிழா**

திரு அருணகிரிநாதர் திருக்கோயில்

**16-வது ஆண்டு நிறைவு விழா**

நினைவு வெளியீடாக வெளியிடப் பெற்றது

# முகவுரை

இந்த தமிழலங்காரம் என்னும் நூலை இயற்றியவர் தவத்திரு தண்டபாணி சுவாமிகள். மற்றும் இவரது பெயர் வண்ணிச்சாபம் முருகதாசசுவாமிகள் திருப்புகழ், சுவாமிகள் என்றும் கூட தமிழ் நாட்டில் வழங்குகிறது. சுவாமிகள் பிறந்தது திருநெல்வேலியில். ஐக்கியம் அடைந்த தலம் திருவாமாத்தூர் ஆகும்.

தவத்திரு அருணகிரிநாதர் கந்தர் அலங்காரம் என்ற நூலை இயற்றியுள்ளார். அந்நூலின் அமைப்பிலேயே, வேலலங்காரம், மயிலலங்காரம், வாளலங்காரம், தமிழலங்காரம் முதலான நூல்களைத் தவத்திரு தண்டபாணி சுவாமிகள் இயற்றியுள்ளார்.

இத் தமிழ் அலங்காரம் என்ற நூலைத் தாம் இயற்ற நேர்ந்த காரணத்தைத் தமது வாழ்க்கைக் குறிப்புகளைக் கூறும் ''குருபரதத்துவம்'' என்ற நூலில் தாமே விளக்கியுள்ளார்.

ஊரூர் தோறும் பல அடியார்
உடன் போய்ப் பூசித் தமுதுண்டு
சீரூர் பதிகம் பலபாடிச்
சிலர்வாழ்ந் துவக்கச் சிலர்தாழத்
தாரூர் கவியும் சில கூறித்
தவர்சூழ் அருணைத் தலத்தின் வழி
காரூர் பொழில்வே லூரினிற் போய்
வசித்துச் சிலநாள் களிப்புற்றேன்.

அவ்வூர்ப் பதிகம் திருப்புகழ்ப் பாட்
டமுதச் சித்தர் துதிமுதலாத்
தெவ்வூ றொழியும் நிமித்தம்மிகச்
செப்பி யுறல் கேட் டிருபுலவர்
செவ்வூழ்ப் பனவன் வேளாளன்
என்னும் குலத்தார் தேடிவந்து
வெளவூ கத்தால் வட மொழியே
வலிதென் றென்பால் வாதித்தார்

வேதம் பிறந்த ததில் என்றார்
மேடம் அருந்தத் தமிழ்வேதத்
தோதல் இலை என் றுரைத்தேன்; அக்
கரலோ பத்த துன தென்றார்
ஆதல் எகர ஒகரத்தால்
அதனில் இலையோ எனக்கேட்டேன்
வாதம் முடிந்த திலை இரவு
மாறிப் பகலும் வந்ததுவே

முருகப் பெருமான் முழுதுணர்ந்த
புலவன் எனும்சொல் முன்னியதால்
இருகட் சியும்ஒத் தவன்புனைவே
லிடத்திற் கேட்போம் எனத்துணிந்தாங்
கொருபக் கம் சொல் இரண்டும் ஒத்த
தொன்றும் காலம், குலம், நாடு,
மருவு மானம் பகர் நான்கும்
ஆம்ஏழ் சீட்டு வரைந்ததன்முன்

போட்டார், உடன் அங் கொருவனை விட்
டெடுக்கச் சொன்னார் பொருகணை வேல்
வாட்டான் எனும் கண் சிறுமடப்பெண்
வந்தே எடுக்க வேண்டும் என்றேன்
மாட்டார் ஓடி அழைத்து வந்தார்
மணிப் பொற் பணியும் கலையும் அணிந்
தேட்டார் தவளக் கமலமிசை
இருப்பாள் இவளே எனுமாறே

உற்றுத் தமிழே உயர்ச்சி எனும்
ஒரு சீட் டெடுத்தாள் ; உடன் அவர்நின்
பற்றுக் குரிய மூர்த்தி நின்பால்
பகர்ந்த தென்றார், பயில்நாதம்
அற்றுக் கிடந்த பொருள் எனக்கே
சொந்தம் ஆன தருமை எனச்
சொற்றுச் சீட்டைக் கண்ணில் ஒற்றித்
தலைமேல் தரித்துத் துய்த்தப்பால்

சீட்டுள் இருந்த மொழியீற்றில்
திகழும் அருமைத் திருப்புகழ் ஓர்
பாட்டும் வரைந்து தமிழ் அலங்கா
ரமும்பின் பகர்ந்தேன்,

இந்த வரலாற்றுக் குறிப்பைத் தான் முதற்கவியில் ''செந்தமி ழேஉயர் வென்று முன் னாள் ஒரு சீட்டெனக்குத் தந்தனன் கந்தன் தவளமின் சாட்சி சரதம் கண்டீர்'' என்று கூறியுள்ளார்.

இத்தகு சிறப்பு மிக்க இந்த நூலுக்கு தவத்திரு வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளது பெயரர் தவத்திரு முருகதாசசுவாமிகள் சிறந்தமுறையில் உரை எழுதி 1964-ல் வெளியிட்டுள்ளார்கள். அந்த உரையுடன் இப்போது மறு பதிப்பாக வெளியாகிறது.

இந்த நூலை எனது வேண்டுகோளுக்கு இணங்கத் தொகுத்து உதவியவர் சிரவை கௌமார மடாலயம் சுவடித் துறைறைச் சார்ந்த R கிருஷ்ணராவ் அவர்களுக்கு எனது நன்றி உரித்தாகுக.

குருவே துணை

சென்னையில் வசிக்கும் உயர்திரு V. L, பத்மநாபன் B.Com. அவர்கள் (3 சிங்கார வேலு தெரு. தசரத'புரம் சாலிகிராமம்) நமது அருணகிரிநாதர் கிருத்திகைக் கழகத்திற்காக ஆண்டு தோறும் நடைபெற்று வரும் மருதமலை படித்திரு விழா நினைவாக கடந்த பல ஆண்டுகளாகத் தொடர்ந்து பல அருளாளர்களின் நூல்களைத் தமது சொந்தப் பொறுப்பிலேயே சிறந்த முறையில் அச்சிட்டு உதவி வந்துள்ளார்கள். இந்த ஆண்டும் வண்ணச்சரபம் **தண்டபாணி** சுவாமிகள் அருளிய '**தமிழ் அலங்காரம்**' என்னும் அரிய நூலின் முதற் பகுதியை (பாடல்கள் ஒன்று முதல் ஐம்பது முடிய) அச்சிட்டு உதவியுள்ளார்கள்.

அருளாளர் நூல்களைப் படிப்பதும் படிப்பவர்களுக்கு உதவுவதும் மிகச்சிறந்த தவநெறியாகும் அத்தகைய பணிகளை உயர்திரு V L பத்மநாபன் அவர்கள் பல ஆண்டுகளாகத் தொடர்ந்து செய்கின்றார் மேலும் இப்பணி நன்கு நீண்ட நாட்கள் தொடர்ந்து செய்யும் அன்னாருக்கும் அவரது குடும்பத்தார் அனைவருக்கும் மருதமலை ஆண்டவன் சகல செல்வயோகம் மிக்க பெருவாழ்வும் சிவஞானமும் அளித்தருள மன, மொழி, மெய்களால் வேண்டுகிறோம்.

உயர்திரு G K இரங்கசாமிக் கவுண்டர் மகனாரும் பாரதி அச்சகத்தின் உரிமையாளருமான உயர்திரு R. கண்ணுசாமி அவர்கள் தமது சொந்த செலவில் இந்த தமிழ் அலங்காரம் என்னும் அரிய நூலின் இரண்டாவது பகுதியை (பாடல் 51-க்கு மேல்) அச்சிட்டு வெளியிடுகிறார்கள்.

எல்லாம் வல்ல முழுதறி புலவனான முருகப்பெருமான் உயர்திரு R. கண்ணுசாமி அவர்களுக்கும் அவர்களது குடும்பத்தாருக்கும் சகல செல்வ யோகம் மிக்க பெருவாழ்வும் சிவஞானமும் பாலித்து அருளுவாராக.

பக்தி நூல்களை விரும்பி நல்லமுறையில் அச்சிட்டு வழங்கும் பாரதி அச்சகம் மேலும் பல நவீன அமைப்புக்களுடன் நீண்ட நாட்கள் தன்பணியில் சிறந்து விளங்க. பாரதி தேவியின் பத மலர்களைப் பணிந்து வேண்டுவாம்.

**ஆ. அருணாசலம்**
*தலைவர்*
**28—12—1996**

மருதமலை திரு அருணகிரிநாதர்
அருள்நெறி கிருத்திகைக் கழகம்
**இராமநாதபுரம் கணேசபுரம் கோவை-45**

உ

குருவே துணை

தமிழலங்கார நூலின் ஏதுவாகிய

## அற்புதத் திருப்புகழ்

தன தான தத்த தந்த தாத்தத் தனந்த - - - தனதானா

உலகோர்கள் மெச்சு பைம் பொன் வேட்கைக் குள்உற்று
மகமேரு ஒத்த கொங்கை காட்டிப் பகட்டி
உழைபோல்வி ழிக்கும் மங்கை மார்க்குட் சலித்து
-- மெலியாதே.

உயர் சோலை சுற்று குன்ற மேற் கட் டிவைத்த
பலகோயி லிற்புகுந்துன் ஆக்கத் தைமெச்சி
உமை கேள்வர் பெற்ற ஒன்றை நோக்கிக் கிடப்ப
— தொழியாதே.

பலவூண்உ ணர்ந்து ணிந்த மூர்க்கப் பிணக்கர்
குலம்நீறெ ழச்சி னந்து தாக்கற் குதித்த
பரிசாளர் முற்பகர்ந்த பாட்டைப் பழிக்க
— நினையாதே.

பனிவேய்வ னத்தில் வந்து நீற்றைக் கொடுத்தொர்
கிளிதான்எ னச்சொல் உன்றன் வார்த்தைக் கிடக்கர்
பழுதோது முற் சிறந்த பேற்றைத் தரற்கு
— வருவாயே.

மலரோன்அ ழக்கரங்க ளாற் குட் டிவெற்பில்
ஒருநீள்கு கைக்குள் அன்று போட்டுக் களித்து
மழமால்விடைக்கண் வந்தமூர்த்திக் கொர்மெய்ச்சொல்
— பகர்வோனே.

வழுவாத பத்திகொண்டு பேற்றித் தவித்த
கவிவாண னுக்கி ரங்கி வேற்றொட் டுமுத்தர்
மனநோவ றப்புரிந்த கீர்த்திப் பெருக்கம்
— உடையோனே.

தலம்ஆரி டத்தும்அன்ப ராற்சித் தியற்றி
இமவான்அ ளித்தமங்கை பாற்செப் பைஒத்த
தனம்வாய்உ றக்கொள் அந்த நாட்பொற் பில்உற்ற
— முருகோனே.

தனிவாசம் உற்ற தென்றல் ஆற்றற் படைத்த
பொதியாச லத்தில் அன்று தோற்றிப் பழுத்த
தமிழேஉ யர்ச்சிஎன்று சீட்டுக் கொடுத்த
— பெருமாளே.

முற்றிற்று

உ

குருவே துணை

# தமிழலங்காரம்

## காப்பு-கட்டளைக் கலித்துறை

இமிழலங் கார மதநீர் அருவிகள் எப்பொழுதும்
உமிழலங் காரத் தலைக்கண நாதனை உன்னுகின்றேன்
சிமிழலங் கார முலையார் மொழியினும் தித்திப்பதாம்
தமிழலங் காரக் கவிநூறும் நன்கு தருவதற்கே.

## நூல்

### தமிழின் ஏற்றமும் தன்மனக் கருத்தும்

செந்தமி ழேஉயர் வென்றுமுன் னாள்ஒரு சீட்டெனக்குத்
தந்தனன் கந்தன்; தவளமின் சாட்சி, சரதம்கண்டீர்
சந்தனக் குன்றின் முனிக்கோன்மற் றொன்றைச் சரிசொலினும்
முந்தறி வற்றனன் என்றே துணிந்து மொழிகுவனே. 1

### வலப்புறம் தெற்கு எனவே. தென்மொழி உயர்வாம் எனல்

தென்பாக மேவலம் என்று வடமொழிச் சீர்உணர்ந்தோர்
அன்பால் உரைத்திடக் கேட்டும், தமிழ்ச்சுவை ஆய்ந்தவர்நேர்
வன்பார், மடமை மலிவால் அதனை வலத்தினதாம்
என்பார்; இம் மாற்றம்என் கொல்லோவெண் தாமரை
ஏந்திழையே 2

### பத்திஉயர்வு—கருமம் தாழ்வெனல்

வடகலை தென்கலை என்னும் வழக்கு வயிணவத்தின்
இடமல(து) இல்லை; இரண்டு கலையும் இயற்(று) இருவர்
தொடர்பொழு(து) ஏத்தல்அம் மூர்த்தியை யே,ஒன்று சூழ்கருமம்
படர்தரும் பத்தியொன் றாம்இத னாற்றரம் பார்த்துய்ம்மினே. 3

### கருணையை விளக்கும் கன்னித் தமிழ்மொழி

நான்முகன் தக்கன் முதலோர் அநேகர் நவின்றவட
நூன்முழு தும்கொலை வேள்வியைப் போற்றும் நுடங்கரிய
வேன்முனைக் கண்ஒளவை வள்ளுவன் ஆதியர் விண்டதென்னூல்
ஊன்முழுப் பாவம் எனவே அடிக்கடி ஓதிடுமே. 4

### அரனார் மணத்தை அகத்தியர் முடித்தார்

வாணிமின் னால்வலக் கொங்கையொப் பாம்தமிழ்; மற்றும்ஒரு
மாணிளங் கொங்கையொப் பாம்ஆ ரியம்; என்ன வாய்வந்திடார்
கோணிய வெண்பிறைச் சென்னியி னான்மணக் கோலம்தன்னைப்
பாணினி தான்புரந் தானோஎன் பார்முற் படைப்பவரே. 5

### பொதியைச் செந்தமிழ் புவிசமம் செய்தது

எவ்வகைத் தேவரும் மாதவர் தாமும் இமயம்என்னும்
அவ்வரைப் பால்உற்ற நாள்அவர் ஆழியில் ஆழ்ந்தொழியா(து)
ஒவ்வரும் செந்தமிழ்த் தாயாம் முனிவன் உயர்பொதியைச்
செவ்வரை மேல்வந்த வா(று)எந்த நூல்களும் செப்பிடுமே. 6

### அகத்தியர் விந்தம் அடக்கவந்தது தமிழ்

விந்தமென் றுள்ள மலைமீதெழுந்து விபுதர்அழச்
செந்தகைச் சூரியன் தேர்ஓடி டாவிதம் செய்தஅந்நாள்
பைந்தமிழ்த் தேசிக னோவட நூற்றுணைப் பாணியோ
வந்தடங் கப்புரிந் தான்,வேத மாமுனி வாய்சொல்லுமே. 7

### மாயனும் ஈசனும் சென்றனர் தமிழ்ப்பின்

இந்திரன் றன்னோடு வானவர் தாமும்நல் இன்பமெய்த
வெந்திறற் றானவன் தன்தவம் பாழ்பட வேலையுண்டு
பிந்திஅவ் வாறு நிறைவாக விட்ட பிரான் தமிழ்ச்சீர்
செந்திருக் கேள்வனும் ஈசனும் தேர்ந்துபின் சென்றனரே 8

### கோயிற் கடவுளர் குடிவிட்டேகல்

கணிவண்ண னென்றெரு மன்னவன் சிந்தை கலங்கக்கச்சி
மணிவன்னன் தன்திருக் கோயில் விட்டேகி வரச்செய்ததும்
பணிவண்ணச் செஞ்சடைச் சொக்கர்முன் போய்வரப்பண்ணியதும்
அணிவண்ணம் எட்டொடுதென்றல்வெற்(பு) ஈன்ற அருந்தமிழே. 9

### காற்றின் தகுதியால் கவின்தமிழ் உயர்வெனல்

தண்டமிழ் வாசம் கலந்து குலாவும் தனித்தென்றலும்
ஒண்டகை ஆரியச் சீர்தோயும் வாடையும் ஊனில்ஒன்றி
மண்டலத் தோர்க்குத் தரும்பயன் றன்னை மதித்தறிந்து
கண்ட வயித்தியர் வாய்மேன்மை தாழ்மையைக் காட்டிடுமே. 10

சுந்தரர் தமிழ்க்காத் தூதாய் அரன்செலல்

பல்கோடி மங்கையர் கண்டுகண் டேங்கும் படிஒருக்கால்
புல்கோலத்(து) ஈசன்,முன் ஆரூரிற் போற்றும் புலவன்உள்ளம்
மல்கோகை வேண்டி ஒருவிலை மாதெதிர் வாய்திறப்ப
வெல்,கோ மளச்சுவை நீங்காத தாகும் வியன்தமிழே. 11

மதலையை எழுப்பும் வண்டமிழ் மொழியே

மந்தரக் கொங்கைப் பரவைதன் கேள்வனும் மற்றையராம்
வந்தனக் காரரும் இன்புறுமாறு மறைபயிலும்
அந்தணச் சேயை அவிநாசி யூரில் அழைத்ததெண்ணில்
சந்தனக் குன்றின் தலைமேற் பிறந்த தமிழ்த்தெய்வமே. 12

ஆரூரர் கயிலைசென் றறைந்ததும் தமிழே

எள்ளாத ஆதிசை வக்குலத் தோர்மனை யிற்பிறந்தும்
வள்ளாரும் வேல்மன் மகவாயினானை, வயங்குதமிழ்;
கொள்ளா அளவில் அடங்காத இன்பம் கொடுத்துப்பின்பு
வெள்ளானை யேற்றிக் கயிலாய மீதுற விட்டதுவே. 13

வாதவூ ரர்க்கருள் வழங்கும் தமிழ்மொழி

அலரோன் புதல்வர் ஒருநால்வர்க் காகக்கல் லால்அடியில்
பலநாள் தவம்கண்டு வந்துற்ற மூர்த்தியை, பன்னுதமிழ்,
குலவேந்தர் போற்றும் வழுதி அமைச்சன் குறிப்பறிந்து
மலர்பூங் குருந்தை நிழலூடு தோற்ற வருவித்ததே. 14

குதிரையில் அரன்வரக் கொண்டது தமிழே

அன்போங்கப் போற்றுநர் வேட்கை எளிதில் அடைவதெண்ணி
முன்போர் முனீச்சுரன் தந்துள தாம்தமிழ்; மூரிவிண்ணோர்
என்போடு சென்னியும் பூண்(டு) ஈமத்(து) ஆடி இரப்பவனைப்
பொன்போலு மேனிப் பரிமீதும் ஏறப் புரிந்ததுவே. 15

வந்திக் காளாய் வரச்செயும் தமிழே

எவ்வுயி ருக்கும் உயிரா நிறையும் இறைவன் தன்னை
வெளவும் ஒருவன் தமிழ்த்துதித் கா,க்கிழ வந்தியின்ஆள்
ஒவ்வும் வடிவும் எடுத்துமண் கூடை யுடன்சுமந்து
வெவ்வுர கம்பொரும் வேத்திரத் தாக்கும் மிலைந்தனனே. 16

வாசகத் தமிழ்அரன் மன்றினிற் பேணுதல்

வண்மைப் பராசன் மகன்சொல் ஐந்தாமறை வாசகத்தை
அண்மைப் புதல்வன் கரத்தால் வரைவித்த அண்ணல், அருள்
உண்மைத் தமிழ்த்திரு வாசகப் பாடல் ஒருங்கெழுதிப்
பெண்மைக்(கு) உவகை தரும்அரங் கூடுறப் பேணினனே. 17

மணிவாசகர் முத்தி மாண்புறச் செயுல்தமிழ்

மன்னும் தமிழிற் றுதிசெய்த மாணிக்க வாசகரும்
பன்னும் பெருமை உணர்ந்தேத்தும் கீர்த்தனைப் பாவலனும்
துன்னும் கதிமற்றை யோரடைந் தாரெனச் சொல்லும்கொலோ
உன்னும் கடற்றிரைப் பைந்தானை சூழ்தரும் ஒன்புவியே. 18

ஞானசம்பந்தர் நவின்றது தமிழே

சீகாழி யூர்த்தடம் பொய்கைக் கரையிற் சிறிதழுத
வாகாரும் சேய்க்(கு)உமை நல்கிய பாலின் மதுரம்; அன்பர்
சோகாந்த காரம் கெடத்தமிழோடு துலங்கிற்றன்றி
ஏகாரத் தின்குறில் இல்லாக் கலையொ(டு) இலங்கிற்றன்றே. 19

சம்பந்தர் தமிழ்ச்சீர் சங்கரர் புகன்றனர்

வேதவி யாசனைக் கைதூக்கி அங்கு விடப்பகர்மெய்ப்
போதமு டைச்சங்க ராசா ரியனும், பொருவில் அருள்
மாதரி பாலுண்ட செவ்வாய்க் கவுணியன் வண்டமிழ்ச்சீர்
ஓதலுற் ருன்வட சொல்லால்என் ருல்நன் குணர்ந்துய்ம்மினே 20

வடமொழி தாயெனில் வண்தமிழ் தந்தையாம்

அரக்கன் அமைத்துள்ள ஆந்தாத்தோர்கள், அதைப்புகழ்ந்(து)எத்
திரக்கலைக் கும்தல்லி தான்ஆ ரியம்என்பர்; செப்புசொல்லில்
மரக்கவின் ஆர்பொதி யைத்தமிழ்ச் சாடை மலியும்அதால்
உரக்கரு ணைத்தந்தை தான்ஈதென் ஞேர்த்திட் டுரைக்கைநன்றே.

தென்சொலும் வடசொலும் சேர்ந்ததெம் மொழியும்

புகல்எனும் சொல்லினைப் போல்எனச் சொல்லுதல் போற்பலசொல்
இகல்இந்துத் தானியும் செந்தமி ழிற்கொண்(டு) இயம்புகின்றார்
அகல்நிலத் துள்ள கலையாவும், தென்சொல் லதுவும். எதிர்
திகழ்வட சொல்லும் கலந்தே விளங்கும் தெரிந்திடினே. 22

இருவித மொழியையும் இகழபவர் தீயோர்

கும்பன் குதத்தில் தமிழ்தோன் றிற் றென்னக் குளறுகின்ற
வம்பரும், கொன்றன் றி வாழா மிலேச்சர்தம் வாய்உமிழும்
தம்பல மேஒக்கும் ஆரியமென்னும் சழக்கர்களும்
வெம்பகை யாழ்இகழ் சண்டாளர் தாமென்கை மெய்ம்மொழியே23

பாலறா வாயர் பரிசுறச் செயுந்தமிழ்

எக்கலை யாலும் இறைவனைப் போற்றினர் எண்ணிலர்தாம்
மெய்க்கவின் ஆர்தமி ழாற்றுதி பாடொரு மென்குருந்திற்
கைக்கணி தாளமும் வெண்முத்துப் பந்தரும் காகளமும்
மைக்கக னம்தரப் பெற்றார்மற் றில்லையிவ் வையகத்தே. 24

எலும்பு பெண்ணாவர இசைக்கும் தமிழ்மொழி

சுட்டவெள் என்பின் குடத்தா டிருந்தொரு தோகைநல்லாள்
கட்டழகோடு மயிலைத் தடாக கரையில்வர
விட்டது செந்தமி ழேஅல்ல வோ?அன் றி வேறுகலை
நட்டவண் செய்ததுண் டேற்சொல்லு வீர்இங்கு நன்குணர்ந்தே.

அனல்புனல் வென்(று)அமண் அழித்தது செந்தமிழ்

கதிர்பூத்துக் காய்ந்(து) உதிரும்பனே, காய்த்துக் கனியுன்அங்(கு)
எதிர்தோன்றச் செய்ததும், தீயைவென் றிட்டதும், ஏடெதிர்த்து
நதிநீந்தக் காட்டலும். கூன்பாண் டியன்நன் னலம்பொருந்த
அதிகோரச் சாரண் ரைக்கழு வேற்றும் அருந்தமிழே. 26

மணத்தில் முத்தி வழங்கிடும் தமிழே

எத்திசை யிற்கலை யாதாலும் போற்றினர், ஈசன்உண்மைப்
பத்திசெய் தேத்திப் பணிந்தாலும், காழிப் பனவர்பிரான்
சித்திபல் கோடி விளையாடி நன்மணம் செய்தஅன்றே
முத்தியைத் தானம் இடச்செய்த வான்கலை, முத்தமிழே, 27

கதவு திறந்தடைக்கச் செயல்தமிழே

வேதங்கள் யாவுமொன் றாக்கூடி யீசன் விரைமலர்ப்பொற்
பாதங்கட் கான பலபூசை செய்து, பழுதிலருள்
நீதந் துலங்கப் பொருத்தும் கபாடத்தை நீக்கி அமைத்(து)
ஏதங் களைந்துல கெல்லாம் புரந்துற்ற(து) இன்தமிழே. 28

அப்பர்க் கருட்செயல் அளவில செயல்தமிழ்

கடல்நீரிற் கல்மிதக்கும்படி செய்து களி(று) உறுக்கும்
அடல்யாவும் குன்ற அடக்கி,வெந் நீற்றறை அம்புயப்பூந்
தடமாகக் காட்டி, அரவால் இறந்த தனயனையும்
உடலோ டெழச்செய்த தன்றோ ஒருவன்சொல் ஒன்தமிழே. 29

கயிலைக் காட்சி கதிதரும் கவின்றமிழ்

காணரி தாய கயிலாயக் காட்சியைக் காட்டி, எழிற்
சேணகத் துள்ள மடவாரைப் பொன்னைச் செழுமணிதோய்
பூணனந் தத்தைப் புறம்நீக்கும் ஆர்வம் பொருத்தி, முத்தி
மாணடை யச்செய்த தன்றோ ஒருவற்கு வண்தமிழே. 30

தருமிக்கு அரன்கவி சாற்றல் தமிழ்மொழி

வருமிக்கு மன்னர் புறங்காட்டத் தாக்கும் வழுதிமனம்
ஒருமிக்கும் இன்பம் உறக்,கீரன் நெஞ்சகம் ஒல்க,வம்பில்
உருமிக் குதர்க்கம் இடுவார் இலக்கணம் ஊறுபடத்
தருமிக்கு நன்மணம் செய்த(து) ஒருசெந் தமிழ்க்கவியே, 31

சேரர்பாற் பாணன் திருவுறல் செந்தமிழ்

ஆணவம் ஆதி மலமூன்றும் தீர்க்கும் அருட்பெருமான்
மாணவிர் வீணை யிசைகேட்(டு) உருகி மதுரைநகர்
காண விறகும் சுமந்தான் எனவும் கழறுகின்ற
பாணன் கலியறச் செய்ததும் செந்தமிழ்ப் பாசுரமே. 32

உமாபதி கதிதர ஓதியது அருந்தமிழ்

பெத்தானை யென்றும் பிறவாத வீட்டினிற் பேணஅருள்
வைத்தாண்ட சிற்றம் பலத்தான்,கைச் சீட்டு வரைந்துபெரும்
சித்தாடும் கொற்றங் குடியாற் கனுப்புத் தினம்;தமிழே
இத்தா ரணிக்கலை யெல்லாமும் நாண எதிர்நின்றதே. 33

கண்டாயோ என்ற கவி உமைசொலல் தமிழ்

எள்ளிற் றயிலம் எனநிறைந் தான்றன் இடத்திருந்து
கள்ளிற் சிறந்த மொழிபேசு(ம்) மங்கை, கனசபையில்
துள்ளித் தவிப்பவன் வாழ்வடை வான்வந்து தோற்றச்செய்த(து)
உள்ளிற் கருதும் பொருள்காட்டும் செந்தமிழ் ஒன்கவியே. 34

உமையவள் சோறிட உளுற்றும் உயர்தமிழ்

ஆசிப் பசுந்தமிழ்ப் பாமாலை பாடுமொர் அந்தணன்றான்
காசிக்குப் போம்பொழு(து) அன்னோன் மகளெனக் காட்சிநல்கி
நேசித்தமுதும் படைத்தாள் உமையென்னும் நீடுபுகழ்
பேசிற் பிறக்கலைப் பாவணர் யார்க்கும் பெருந்துயரே. 35

மாயையை விலக்கிய மாறன் சொலல்தமிழ்

மாதா வயிற்றிற் பிறந்தஅன் றே.சட வாயுவென்னும்
தீதார்த் திடாமற் சினந்துண வின்றிச் சிறந்து,மலர்
வேதாவும் எய்தரும் பேறடைத் தானும் வியன்தமிழால்
தாதார் துழாய்நிகர் பாடல்செய் தான்பலர் தஞ்சமென்றே. 36

கிழியறுத்து அரிபுகழ் கிளத்த வரும்தமிழ்

மீனக் கொடியுடை வேல்வேந்தன் கோயில் வியன்முகப்பாம்
தானத்தில் தூக்கிய பைம்பொற் கிழியைச் சகலகலை
ஞானப் புலவரும் கண்டேங்க ஓர்தமிழ் நாவலவன்
வானத் தவர்பன் மலர்தூற்றக் கொய்த வழக்கொன்றுண்டே. 37

ஆண்டாள் புகன்ற அருட்கவி செந்தமிழ்

மாமாலை வீழிக் கனியிதழ் வாய்கொண்டு வண்டமிழ்ச்சொற்
பாமாலை யால்மிகப் பாடிய மங்கைப் பருவமுள்ளாள்
பூமாலை சூடிக்கொடுத்தும் அளவில் புகழ்புனைந்தாள்
காமாலைக் கண்ணிகர் நெஞ்சுடை யார்அது காண்பதரிதே, 38

பாணனை மால்உணப் பண்ணிய தின்றமிழ்

வித்தனைத் தென்று பலர் போற்றும் பல்கலை வெஃகினரும்
எத்தனை யோவித மாத்திரு மாலை யிறைஞ்சியதுண்(டு)
அத்தனை பேர்களுள் ஆரேனும் செந்தமி ழாற்புகழ்ஓர்
பத்தனை யுண்டது போல்உண்ணும் மேன்மை படைத்திலரே. 39

தீமையை நலமாச் சேர்த்தது தமிழே

வண்டமி ழாற்றுதி செய்கின்ற சீர்மலி மங்கைமன்னன்
கண்டன யாவும் கவரும் களவும் கனத்தபொய்யும்
தண்டம்வில் வாள்கொடு செய்யும் கொலையும் தவப்பயனாய்
அண்டரும் எய்தற் கரிதாய வீட்டில் அமைந்தனனே. 40

### மாயன்கால் கடித்த மங்கைமன் சொலல்தமிழ்

ஆவிலே தன்னில் அணிப்பாம் பணையில் அசோதையன்னுர்
பாலிலங்(கு) ஏணையிற் றன்வாய் சுவைத்த பதங்களைக்,கார்
மா(ல்)இக லோகத்(து) அருந்தமி ழால்மிக வாழ்த்தும்ஒரு
நால்இயற் பாவலன் வாயும் பருகிட நல்கினனே. 41

### சிவன், மால், கேட்கமுன் செல்வது தமிழே

பல்கலை போற்றும் வடகலை, தென்றற் பருப்பத(ம்) முன்
நல்க வரும்தமிழ்ப் பால்இகல் எய்தலின், நல்இதழி
மல்கணிச் செஞ்சடை யானும் திருநெடு மாயவனும்
ஒல்கப் புறத்துய்த்து ளார்முன்னர் நின்ற(து) ஒலிக்கவைத்தே. 42

### பனைத்துண்டு மூன்று பழந்தரச் செயும்தமிழ்

நனைத்துள்ள ஆடை உலருமட்(டு) ஓர்கந்தை நல்கியபெண்
வினைத்துயர் நீங்கி, மணமெய்தி, மானிடர் வேண்டுசெல்வம்
அனைத்தும்எய் தும்படி செய்தது மன்றி, அரசர்கட்காப்
பனைத்துண்டு மூன்று பழந்தரக் கண்டதும் பைந்தமிழே. 43

### பலா தழைக் கத் தமிழ் பாடினள் ஔவை

கோளத்தை முட்டி வளரும் பொதியைக் குவ(டு)உவப்பத்
தாளத் தனத்தியர் கொண்டாடிப் போற்றும் தமிழ், எயினன்
வாள் அற்றை நாள்வெட்டச் சாய்ந்த பலாப்,புவி வான் அறிய
மீளத் தழைத்துக் கனியாய்ச் சொரியும் வியன்தந்ததே. 44

### ஔவை தமிழ்மொழி அருமறைப் பொருளே

வளப்படு தாமரைப் புத்தேள் விரிக்கும் மறைமுதலாம்
அளப்பரும் வேதப் பயனும் தொகுத்திட்(டு) அகிலமிசை
சளப்படு மானிடர் உய்வான்முன் நாளையிற் றந்தஔவை
உளப்பது மத்தும் தமிழ்தோய்வ தோரும் உணர்ச்சிநன்றே. 45

### சங்கப் பலகைமுன் தாங்கிய தின்றமிழ்

எல்லாக் கலைகட்கு மேலாய்வெண் டாமரை யிற்குலவும்
நல்லாள் ஒருபொற் பலகைய தாகி நறுந்தமிழை
அல்லாது மற்றொன்றைத் தாங்கின ளோ ? அத னல் அல்லவோ
கொல்லாத வேதமும் தோன்றிய(து) இந்தக் குவலயத்தே. 46

### அகத்தியர் தமிழில் அருட்பரம் விளங்கல்

பற்பல வாம்உல கெல்லாம் புரக்கும் பரமும்விண்ணில்
சொற்பயின் றெப்பிய நூல்முனிக் கூட்டத்தின் தொல்அரசாம்
விற்பனக் கும்பன் தவம்நேர் தமிழில் விளங்கிற்றன்றி,க்
கற்பவர் கற்கும் கலையாவி னூடும் கவின்றதின்றே. 47

### பகவனெ(டு) ஆதிசேய் பலர்சொலல் தமிழே

செந்தகைத் தாமரை யானும்வெண் தாமரைச் சேயிழையும்
இந்த வுலகி னிடைபுணர்ந் தீன்ற எழுமகவும்
வந்த வுடன்றமிழ்ப் பாவே நுவன்ற வகைஉணர்வார்
எந்த விதத்தில்மற் றோர்கலைக்(கு) ஏற்றம் இயம்புவரே. 48

### சேரர் கயிலையிற் செலவிடல் தமிழே

ஆரன்றிக் கொன்றையும் சூடும் பிரானை அருந்தமிழால்
ஈரம் பொலியத் துதித்தத ஞல்அன்(று) எழிற்றிருஆ
ரூரன் தயைபெற் (று)அவனேறும் வெண்களிற் றேடுறவாய்ச்
சேரன் குதிரை மிசைபோய்க் கயிலையிற் சேர்ந்தனனே. 49

### ஔவையைக் கயிலையில் அவிரவைத்தது தமிழ்

செந்தமி ழால்ஒரு சீதக் களபச் செழும் அகவல்
தந்தமொன் றுள்ளமுன் ஞேன்மிசை பாடிய தன்மையினல்
சுந்தர மூர்த்தியும் சேரர்பி ரானும் துணுக்கமுற
அந்தண் கயிலையிற் சென்றிருந் தாள்ஔவை அக்கணத்தே. 50

# உரைக்குறிப்பு



1. செம்மை வாய்ந்த தமிழ்மொழியே உயர்வென்று கலைமகளறிய ஒரு சீட்டை முருகன் கொடுத்தான். பொதியை மலையில் உள்ள அகத்தியர், தமிழுக்கு ஒப்பாக வேறு ஒரு மொழியைச் சொல்ல ஒருவேளை முற்படுவாராயின், முன்பிருந்த அறிவுத் தெளிவு, இப்போது வயதாகித் தளிர்ச்சியுற்ற காரணமாகக் கலங்கி ஓதுகின்றனர் என்று துணிவுடன் கூறுவேன். என்பதாம் எனவே, உயர்வென்று கூறாவிடினும், சமமென்றும் கூறுதல் தவறு என்பார்போல, சரிசொலினும் என உம்மை கொடுத்து ஓதினர் என்க.

2. தென்திசையை வலப்பாகமென்று வடமொழியினரும் கூறுவர். தமிழ் அறிவுற்றவர் போன்றசிலர், அந்த வடமொழியை வலமாகுமென்பர். இது என்ன முறையென்று கலைமகளையே முன்னிலையாக்கி வினாவினர். தென்மொழிவலம், வடமொழி இடம், என்பதுதெளிவு. தென்றிசைக்குத் தென்மொழி, வடதிசைக்கு வடமொழி, வலக்கரம் உயர்வு, இடக்கரம் தாழ்வு இதில் என்ன ஐயம் ?

3. வடகலை, தென்கலைசென்ற பிரிவினைக் கொள்கை வயிணவரிடமேயுண்டு. அவற்றையுண்டுபண்ணியவர்கள், தேசிகர் மணவாளர் என்பராவர். வடகலை கருமத்தையும், தென்கலை பத்தியையும் முக்கியமாகக் கொள்ளும், வடமொழி ஆசிரியரான பாணினிமுனி ''நமோநாராயணாய சித்தம்'' எனவும் தென்மொழி ஆசிரியரான அகத்தியமுனி ''அரிநமோத்து சிந்தம்'' எனவும் முதலில் திருமாலையே வணங்கினர். கலை என்ற சொல் குறிப்பேதத்துக்கும், மொழிக்கும் பொது. பத்தியே உயர்வென்று ஓதி தென்மொழியான தமிழுக்கேற்றம் கூறியதாம்.

4. பிரமன்-தக்கன் என்ற வடமொழியாளர், அவ்வேதத்தில், பசு, ஆடு, குதிரை முதலியவற்றைக்கொன்று செய்யும் வேள்வியைப் பாராட்டிக் கூறுவர். ஔவை, திருவள்ளுவர் கூறிய தமிழ் வேதம், கொலை, புலை எவ்விதத்தும் கூடாது என்று வலியுறுத்துவதால் உயர்ந்தமொழி தமிழே என்பதாம்.

5. கலைமகளின் வலது மார்பு போல்வது தென்தமிழ், இடது மார்புக்கு ஒப்பது வடசொல் என்றுகூற இசையாதவர் களிடம், பரமனது திருமணத்தை நலமுறச் செய்யவல்லவர், வட மொழித்தலைவரான பாணினியா, தென்மொழித் தலைவரான அகத்தியரா? என்று வினாவில் வாயடங்குவரென்பதாம்.

6. இறைவன் திருமணங்காணுமாறு, தேவர் முனிவர்கூடிய போது இமயம் தாழ்ந்தது. மணம் நிறைவேறும் பொருட்டு அகத்தியரைப் பொதியை செல்ல இறைவன் ஏவினர் என்பதை வடமொழிப் புராணமே கூறுகிறது. ஆகவே, தென்மொழித் தமிழை வகுத்த அகத்தியர் மொழி உயர்வென்பதாம்.

7. விந்தமலை ஆணவத்தால் உயர்ந்து, சூரிய சந்திரர் போகவுமுடியாதிருந்தது. அகத்தியர் பொதியை நோக்கி வரும் வழியில் இதைக்கண்டார். வலதுகையை மலை உச்சியில் வைத்துப் பாதாளம்வரை அழுத்திவிட்டார். ஆகவே தமிழ்த் தலைவரான அகத்தியரது பெருமையை, வேத வியாசர் வட மொழிப் புராணமே கூறும் என்று குறிப்பிட்டனர்.

8. தேவர்கள் வாழும் பொருட்டு, கடலில் மறைந்திருந்த விருத்திராசுரனைக் கொல்வதற்காகக் கடல்நீரை உண்டு, பின் விடுத்த அகத்தியர் அளித்த தமிழின் பெருமையை உணர்ந்து, திருமாலும், சிவபிரானும் தகிழ்மொழியின் பின்சென்றனர். மொழி என்றதால், தமிழ்ப் புலவர் சொற்படி எனக்கொள்க.

9. கச்சிப்பதியில் அரசுபுரிந்த, கணிவண்ணனென்பான் அஞ்சும்படி, மணிவண்ணப் பெருமாளைக் கோயிலினின்றும் வெளிவரும்படி செந்நாப் புலவர் பாடினர். பாம்புப்பணியுடைய சிவபிரானை, மதுரைக் கோயிலினின்றும் வந்து ஆற்றோரம் அமரும்படி இடைக்காடர் செய்தனர் என்பதாம்,

10. தண்மையுடன் தமிழின் இனிமை கூடிவரும் தென்றற் காற்று, உடலுக்கு நலம்தரும். கடினமான வடமொழித் தன்மை விரவிவரும் வாடைக்காற்று, உடலுக்கு அயர்வைத்தரும். இதனால் உள்ள தரங்களை மருத்துவ நூல் வல்லாரே கூறுவர் என்று தமிழின் உயர்வைக் குறிப்பாற் கூறினாராயிற்று.

11. தாருகவனத்து முனிவரது வாழ்க்கைத் துணையான மாதர்கள் ஏங்கும்படி பிட்சாடனராக அன்று சென்ற சிவபிரானை, இடையில் வந்த சுந்தரர், தன்னால் விரும்பப்பட்ட பரவையாரிடம் தூதாகச்செல்ல ஏவினர் என்றால், இளமையும் இனிமையுமுடைய தமிழ்த்துதியின் சிறப்பேயாம் என்க.

12. பரவையாரின் கணவரான சுந்தரர், உடனிருந்த பலரும் வியக்குமாறு அவிநாசியூர்க் குளத்தினிடமாக, மூன்றாண் டுக்குமுன் முதலையால் இறந்த அந்தணச் சிறுவனை உரிய வளர்ச்சியுடன் வறண்ட குளத்தில் நீர்வந்து, முதலை தோன்றி அதன் வாயினின்றும் உமிழச் செய்தனர். ஆயின், பொதியை யினின்றும் தோன்றிய தமிழின் ஏற்றமேயாம் என்றார்.

13. ஆதிசைவராகத் தோன்றிய சுந்தரரை நரசிங்கமுனை அரையர்தனது அபிமானப்புதல்வராக வளர்க்கலானார். பின் அருட்பேறு பெற்றனர். ''பித்தாபிறை'' என்பது முதல் ''தானெனை'' என்றவரை பாடிய தேவாரத் தமிழ்ப்பாடலின் பயன், பல அருளாடலைச் செய்த தன்றி, இறைவன் யானை யான 'ஐராவதம்' என்ற வெள்ளை யாயையின் மீதேறச் செய்து கயிலையிற் சேர்த்தது எது ? தமிழேயாம் என்றவாறு.

14. பிரம புத்திரராகிய, சனகர் முதலியோர்க்கு, அவர்கள் பல வேதசாத்திரங்களைப் பலகாலம் கற்றதனால் அடங்காத மனதை, ஒடுங்கும் வழியை அறிவிக்கும் பொருட்டு, கல்லால் நிழலில் குருவடிவாயிருந்து கணப்பொழுதில் காட்டியருளிய சிவ பிரானை, திருப்பெருந்துறைத்தலத்தில், சற்குருநாதர் வடிவில் தோன்றி, திருவாதவூரரை ஆண்டருளச் செய்தது திருவாசகத் தமிழின் இனிமையே என்பதாம். வருங்காலத்தில் பாடப்பெறு குறிப்பையறிந்து முன்னமே ஆண்டனர் சிவம் என்று கொள்க.

15. அன்பர்கள் ஓதி எளிதில் இறையருளைப் பெருமாறு முனிபுங்கவரான, மணிவாசகர் பாடியருளிய திருவாசகத் தமிழ், எலும்பு முதலியவற்றை யணிந்து மயானத்தில் ஆடியபரமனை, அழகிய குதிரை மீதேறிவரும்படி செய்தது என்பதாம்.

16. சகல உயிர்களிடத்தும், உணர்வு வடிவாய் உள்ள சிவபிரானை, அன்போடு வழிபட்ட திருவாதவூரருக்காக, வந்தியின் ஆளாக வந்து, மண் எடுத்து அடிபடவும் செய்தது தமிழ் எனச் சிறப்பித்தார்.

17. பராசர முனிவர் மகனான வியாசர் கூறிய வடமொழிப் பாரதத்தை, அணிமையிலிருந்த விநாயகரைக் கொண்டு, மேரு மலையின் மீது எழுதும்படி கூறினார் இறைவன். அன்புருவான திருவாதவூரடிகள் பாடிய, தென்மொழித் திருவாசகத்தைத் தன் கரத்தால் எழுதியும், பொன்மயமான கனகசபையில் உமாதேவி மகிழப் பாதுகாப்பாகவும் வைத்தனர் என்பதாம்.

18. திருவாசகமும், திருக்கோவையும் பாடிய திருவாதவூரர் போலவே, அவரது புகழையுணர்ந்து போற்றிய, நாடகத் தமிழ்ப் புலவரான முத்துத்தாண்டவரும், பரவெளியிற் கலந்தனர் இது போல, எம்மொழிப், புலவராவது அத்தகைய முத்தியைப் பெற்ற வருண்டா, என வினாமுகத்தாற்றெளிவித்தார்.

19. சீகாழியூரில் உள்ள பிரம்மதீர்த்தக்கரையில், அம்மா அப்பா என்றழுத அந்தணச் சிறுவரான ஞானசம்பந்தருக்கு உமையவள் உதவிய ஞானப்பாலின் இனிமையானது, அடியவரது அஞ்ஞான இருள் நீங்கும்படி, தேவாரத் தமிழாக வெளிவந்ததே யல்லாமல் ஏகாரக்குறிலான எ-ஒ-போன்ற அக்கரங்கள் இல்லாத வடமொழி மூலமாக வெளிவரவில்லை. எனவே ஞானமொழி தமிழென்பதாம்.

20. வேதவிற்பனரான வியாசரைப் போற்றிய சங்கராசாரியார், உமாதேவியின் ஞானப்பாலுண்ட திருஞானசம்பந்தாமியற்றிய சௌந்தரியலகரி நூலில், 75-வதான சுலோகத்தில் ''திரவிடசிசு'' என்று போற்றுகின்றார் என்றால், தமிழின் பெருமை கூருமலேயறியலாம். திரவிடசிசு - தமிழ்க் குழந்தை.

21. இராவணனால் ஆக்கப்பெற்ற ஆந்தர மொழியை, அதற்குறியார் புகழ்ந்து, எந்த மொழிக்கும் வடமொழியே தாய் (தல்லி) என்பர். செப்பு என்ற சொல் தமிழ் மொழி. அவர் அதைத் தாங்கள்சொல் என்ற இடத்தில் வழங்குவர், ஆகவே வடமொழி

தாய்மொழியென்பது சரி. ஆனால் தந்தைமொழி தமிழ் என்று துணிந்து கூறலாம் என்றார். எனவே ஆந்திரத்தையும், வட மொழியையும் ஆதரித்ததுபோன்று தமிழுக்குச் சிறப்புக் கூறினார் தாய்மொழியினின்றும் சேய்மொழி பிறத்தல் பலருமறிவர். தந்தையின்தொடர்பு அறியப்படாமல் குறிப்பாக இருத்தலின். எடுத்துக் காட்ட வேண்டியது அவசியமே ஆயிற்று என்க.

22, புகல் என்ற தமிழ்ச்சொல், போல் எனத்திரிந்து இந்துத் தானியில் வழங்குகின்றனர். வேறு ஒன்று புகுவதற்கிடமாயிருப்பது பற்றிப் புகல் என்று தமிழில் உள்ளது. இதுபோன்று பல சொற்களைப் பிறமொழியினர் திரித்துக் கையாள்வது காணலாம். ஒன்று. தமிழ், திரி, வடசொல் இவை ஆங்கிலத்தில் ஒன்று மூன்று என்ற எண்ணுக்கு ஒன் என்றும், திரி என்று வழங்குவது போல், வடமொழி தமிழ் இரண்டும் கலந்தே எம்மொழியும் அமையும் என்க

23. வடமொழி அபிமானத்தால் தமிழைப் பழிப்போரும், தமிழபிமானத்தால் வடமொழியை இழிப்போரும் பகை காரணமாகப் பேசுபவராதலின், சண்டாளர் என்று கூறினார். எனவே ஆசிரியர், சமரச நோக்கமுடையவராவர். ஒரு மொழியையோ, மதத்தையோ பற்றி நிற்போர், பிறரை நிந்திப்பது தவறு ஆகும். இந்நூலும் தமிழின் சிறப்பைக் கூறவந்ததன்றி வட மொழியை இகழ வந்ததில்லை என்பது உண்மை என அறிக.

24. ஏனைய பலமொழிகளில் பலர் இறைவனைத் துதித்து அருளடைந்துள்ளனர். இருப்பினும், அவை அரசராலும், தெய்வ மூலமாயும் பெற்றிருப்பர். முத்துச்சின்னமும், முத்துக் காகளமும், முத்துப்பந்தரும், வான்வழியாக, சம்பந்தமூர்த்தி பெற்றது போன்றதாயில்லை. ஆகவேதான்; ''மைக்ககனம் தரப்பெற்றார் மற்று இல்லை'' என்றார்.

25. ஞான சம்பந்தர், மயிலாப்பூர்க் குளத்தின் கரையில், சுடப்பட்ட எலும்பின் குடத்திலிருந்து பூம்பாவை வரப்பாடியது செந்தமிழ் மொழியா, வேறு எந்த மொழியாகிலுமா, என்பதைத் தேர்ந்து கூறுக என்பதாம்.

26. கதிர்கள் முதிர்ந்தும், உலர்ந்தும், உதிர்ந்தும் பயனற்று இருந்த ஆண் பனைகள் யாவும், பெண் பனையாகிக் குறும்பையும் காயும், கனியுமாகவும், தீயிலும், நீரிலும், இட்ட ஏடுகள், வேகாமலும், எதிர்த்துச் செல்லவும், கூன்பாண்டியன், சைவ சமயத் தமையவும். சமணர்கள் கழுவேறவும் செய்தது, ஞானசம்பந்தரது நற்றமிழே என்பதாம்.

27. எந்தத் திசையிலும், எந்த மொழியிலும், பலர் இறைவனைப் பாடியிருப்பினும், சீகாழியிற்றோன்றிய ஞானசம்பந்தரை போல, அரிய அருளாடலைச் செய்து, திருமணம் பெற்ற அன்றே வந்திருந்த பலருக்கும் மேலான முத்தியை வழங்கச் செய்த சிறப்பு தமிழுக்கன்றி வேறு எந்த மொழிக்குமில்லையென்றுரேதினாராயிற்று

28. நான்கு வேதங்களும் பூசித்து அடைக்கப்பட்டதான, வேதாரண்யத்துச் சிவன் கோயிற்கதவுகளை, திறந்து வணங்கவும் பின்பு முன்போலவே சாத்தவும் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், தேவாரத் தமிழ் பாடினர், அதோடு அமையாமல் உலகத்தையெல்லாம் அவை காத்தது என்று விளக்கினார். படிப்பவரது அஞ்ஞான இருள் மனத்தைவிட்டு விலகி, அருள் விளக்கமுண்டாகும் என்பது கருத்து.

29. கருங்கல்லிற் பிணித்துக் கடலிற் செலுத்தப்பட்டனர். திருநாவுக்கரசர் அப்போது, அதையே தெப்பமாகக் கொண்டு கரையேறச்செய்து, எதிர்த்தயானையை அஞ்சப்புரிந்து நீற்றறை குளிரவைத்து, அரவால் இறந்த அப்பூதியார் மகனை எழுப்பச் செய்தது, திருநாவுக்கரசரது தமிழ்ப்பாடலேயென்பதாம்.

30. அப்பர் பெருமானுக்கு, எளிதிற் காணமுடியாத திருக்கயிலாயக் காட்சியையுதவி, தேவலோக மாதர்களையும், பொன் முதலியவைகளையும் வெறுக்கச் செய்து, இறைவனோடு ஒன்றுபடும் முத்திப்பேற்றைக் கொடுத்தது தமிழ்மொழியேயாம்.

31. மதுரையில். பாண்டியன் தனது மனைவியின் கூந்தலிலமைந்த இயற்கை மணத்தை வியந்து, புலவர்களைக் கூறும்படி ஓதியபோது தருமியென்ற அந்தணன், இறைவனிடம் முறையிட

ப்ரமன் ''கொங்குதேர்'' என்ற பாடலை எழுதிய ஏட்டை அவனிடம் உதவினார். பாடலைக்கண்ட மன்னன் பெரும் பொருள் உதவப்பெற்று மணம் புரிந்து வாழ்ந்தனன். அப்பாடலைப் பிழை என்று வாதிட்ட நக்கீரர், பின் உண்மை கண்டு வணங்கினார். அப்படிச் செய்தது பரமன் பாடிய பைந்தமிழ் என்பது.

32. உயிர்களுக்கு இயல்பாயுள்ள ஆணவம். கன்மம். மாயை, என்ற மும்மலங்களை நீக்கியருளும் சிவபிரான், பத்தி செய்து வீணையிசை பாடிய பாணபத்திரருக்காக. அவரது ஆளொன்று கூறி, விறகும் சுமந்து, பின் ''மதிமலிபுரிசை'' என்ற அகவற்பாப் பாடியுதவி, சேரன் மூலமாகப் பொருள் வழங்கச் செய்தனர். என்றால் அது தமிழாகிய பாடலேயாம் என்க.

33. சிதம்பரத்தில். பெத்தான், சாம்பான் என்பவனது அன்புக்காக இறைவன் இரங்கி உமாபதி சிவாசாரியார் மூலமாக மறுபிறவியற்ற முத்தியை அவனுக்குத் தரும்படி, ''அடியார்க் கெளியவன்'' என்ற வெண்பாவைப் பாடியெழுதிய சீட்டையுத வினர். அவர் அதுபெற்று, முத்தியுதவினார். அன்றுமற்ற மொழிகள் நாண முன்னின்றது தமிழ் மொழியே என்பது.

34. எள்ளில் எண்ணெய்போல எங்கும் நிறைந்துள்ள பரமனிடத்துள்ள அம்பிகை, அரசன் முன்பு, பலரறிய வருந்திய ஓர் அன்பனுக்காக முன்வந்தனள். அப்படிச் செய்தது தமிழ். தென்னாட்டில் ஒருபெண் கூடாவொழுக்கத்தால் மகப்பெற்று தாழையின் கீழ் அதைவிட்டு ஏகினள். நகர் சோதனைக்கு வந்த மன்னன் கண்டான் மகவை. விடியற்காலைநேரம்,

காக்கைகள் கூடின கைக்கால் உதறிச்சேய் அழுவதால் அவை விலகுகின்றன. தாழை பூத்து விளக்குபோல் அருகிலிருந்தது விட்டுச்செல்ல முடியாது மயங்கினான் அப்போது அங்குவந்த ஒருத்தியிடம் பொருளுதவி, இவ்விவரம் யாரிடமும் கூறாமல் சிசுவை வளர்க்கும்படி கூறியேகினன். குழந்தையின் செயல் வியப்புதவியது. இதைக் கூறுபவர்கட்குப் பரிசு என்று பறை யறைந்தான். யாரும் அறியாராயினர். தேவியுபாசகன் அம்பி கையை வேண்டினன். முன்னிலைப் பட்டனள். பாட்டொன்று

பாடினள் இவன் எழுதினன் முடிவில் ''என்றாள் '' என்று வரைந் தான். அரசனிடம் தந்தான். பரிசும் பெற்றான் அமைச்சன்கண்டு இவன் பாட்டல்ல, என்றாள். என்று இருத்தலால் வேறு பெண் பாடியதென்றான். அரசனுக்கு உடனே ஐயம். தான்கண்ட அப் பெண்ணென எண்ணி வினாவ, அம்பிகை வாக்கென்றான் உபாச கன். பொய்யென்றுக்கருதி ஒறுக்க உத்தரவிட்டான். ஏவலாளன் முயலும்போது, அவன் கையைப் பற்றியபடியே 'என் மகனை ஏன் அடிக்கின்றாய்'' என ஓசை வந்தது உமையவளிடமிருந்து வான்வழியாக. கண்டவர் கேட்டவர் பயந்து, அவனுக்கு மேலும் பரிசு தந்தனர் என்பது வரலாறு.

கண்டாயோ யீனவா கானகத்துக் கள்ளியின்கீழ்
வெண்டாழை பூத்து விளக்கெரிய—ஒண்டொடியாள்
வாழ்க்கைப் படுமுன்னே மைந்தனையும் பெற்றெடுத்தாள்
காக்கைகளை ஓட்டுகின்ற கை. என்பது அம்பிகை பாடல்

35. கவிராச பண்டிதரென்பார், சௌந்தரியலகரி என்ற வடமொழி நூலை, தமிழில் மொழிபெயர்த்துப் பாடினர். அதற்காக அம்பிகை மகிழ்ந்தாள். இறைவன் கட்டளைப்படி அவரது மகள் வடிவில் கன்னிகையாக வந்து, அவர்காசியாத்திரை சென்ற போது ஆறு மாதகாலம் உணவு சமைத்து உதவினள் என்பதாம்.

36. பிறக்கும்போது சடமாயையைக் கோபித்து ஞான விளக்கத்தோடு அவதரித்த நம்ஆழ்வார், தாய்ப்பாலும் உண்ணா மல், குருகூரின் புளி மரத்தடியில் சின்மய முத்திரையுடன் விளங்கினர். அவர். பிரமனும் காணாத அநுபூதி உண்மையை, திருமால் உவக்கும்படி திருவாய்மொழிப் பாடலாகத் தமிழிலேயே பாடியருளினார் என்பதாம்.

37. கயற்கொடி தரித்த பாண்டியன், சபையில் பொற்கிழி யொன்றைத் தூக்கினன். உபாசனை வலிமையால் கிழியை யறுத்தும், கடவுளைக் காணவும் செய்பவர் அதனைப் பெறுவர் என்று பறை சாற்றினான். விட்டுணு சித்தர் என்ற பெரியாழ்வார் அவ்வாறு செய்ய, பல்லாண்டு பாடினர். இதனால் தமிழினருமை யறியலாம்.

38. ஆண்டாள், திருமால் மீது மிகுந்த அன்பு பூண்டு, தந்தையான பெரியாழ்வார், மாயனுக்காகக் கட்டிவைத்த பூமாலைகளைத் தான் சூடிவைப்பாள். இதனைத் திருமால் ஏற்ற னர். ஒருநாள் சூடாத காரணத்தால் அவர் ஏறகவில்லை. அவளது பேரன்புடை ஆண்டாள் பாடியது திருப்பாவை முதலிய

பாடல்கள், அவை தமிழில் உள்ளன அறியாதவர் உண்மை அறியாதவரேயாம்.

39. முத்திக்கு ஏதுவானதென்று பல புலவர்கள் பல மொழிகளிற் பாடிய துதிப்பாடல்கள் இருப்பினும், திருமால் உண்ணும்படியான திருமேனியுடன் விளங்கிய திருப்பாணாழ்வார் பாடிய பாடல், செவ்விய தமிழினாலாகியதே. அவர் போன்ற பேறு யார் பெற்றார் என்க.

40. திருமங்கையாழ்வார் என்பார். செய்த செயல், களவும் வழிப்பறியுமேயாம். அப்பொருளைப் பாகவதர்கட்கே செலவிட்டனர். திருமாலைப் பலவிதமான தமிழ்ப் பாசுரங்களால் துதிசெய்தனர். பாதகச் செயல்கள் தவப்பயனாகியது. திருமால் திருவருளைத் தேவரும் வியக்கும்படி பெற்றார். தமிழ் பாடிய ஒன்றே காரணமென்பதாம்.

41. உலகம் தண்ணீரில் முழுகி அழிகின்ற பிரளய காலத்தில். திருமால் ஆலிலைமீது குழைந்தையாயிருப்பார். அக்கால் தனது பாதவிரலைச் சுவைப்பார். அத்தகைய திருவடியை, நாற்கவிராச நம்பியென்ற திருமங்கையாழ்வார், கடித்து விரல் மோதிரத்தைக் கழற்ற உதவினர். தமிழ்ப்பாடல் பாடியதால் அப்பேறெய்தியது என்பதாம்.

42. பலமொழிகளாலும் புகழப்பெற்ற வடமொழி, முன்ஒருகால், தமிழின்மீது அழுக்காறெய்திய காரணத்தால், கொன்றை சூடிய பரமனும், திருமாலும், வடமொழி நாணும்படி வடமொழி வேதத்தைத் தமக்குப்பின்னும், தென்மொழியான தமிழை முன்னும் ஒலிக்கும்படி செய்தனர் என்று ஒரு செய்திகூறி விளக்கினார் பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங் கொண்டலே. (குமரகுருபரர்)

43. மழையால் நனைந்த சேலை உலரும்வரை அணியுமாறு தானணிந்துள்ள சேலையை உதவிய ஒரு பெண்ணின் மணத்தை, ஔவை மூவரசர் உதவிகொண்டு நிறைவேற்றினள். பரிசுதர வேண்டி வெட்டப்பட்ட பனைத்துண்டை நோக்கி ஒரு தமிழ்ப் பாடல் கூறியதும். நின்று, தழைத்து. பூத்து, காய்த்து, பழமாகி, மூன்றுபழம் உடனே உதவியது. அவ்விதத் தெய்வீகச் செயலைத் தமிழ்தான் செய்தது (திங்கட்குடையுடை) என்பது பாடல் முதலடி.

44. தமையன் தம்பியான வேடர் இருவருக்கும் பொதுவான பலாமரத்தை, அண்ணன் பகையால் வெட்டினான், பலன்

இருவருமிழந்தனர். ஔவையின் அருள் வாக்கால், பழையபடி பலா, தழைத்துப் பழுத்தது, (கூழைப்பலாத்தழைக்க) என்பது முதலடி அத்தகைய அருள் வல்லமை தமிழுக்கே உரியது.

45. நான்குவேத சாரமான அரிய கருத்துக்களை, உலகத்துக்குப்பயன்படுமாறு திரட்டி, எளிய முறையிற் கூறிய ஔவையாரது திருவுள்ளத்தில், தமிழ்மொழியே குடிகொண்டிருந்ததென்பதை ஆய்ந்தறியும் மதியே சிறந்ததாம்.

46. உலகில் வழங்கும் பலமொழிகட்கும் தாயாக (சகலகலாவல்லியாகி) விளங்கும் கலைமகள் மதுரையின் பொற்றாமரை குளத்தில் சங்கப் பலகையாயிருந்து, தமிழ்மொழியைத் தானே தாங்கினாள். அந்த ஏற்றத்தினால்தான், கொல்லாத வேதமாகிய திருக்குறள் (தமிழ்மறை) தோன்றி நிலைத்துள்ளது.

47. எல்லா உலகத்தையும் காக்கின்ற தெய்வமும் உலகில் அன்பர்கள் நிமித்தம் அருளுரை வழங்கும்போது, வானவெளியிலிருந்து அசரீரி மொழியாக, தமிழ்ச் சொல்லாகவே கூறியது. இது அகத்தியர் செய்த தவமாக வந்த தமிழின் சிறப்பு. வேறு மொழியிற் கூறவில்லை என்பதாம். சுந்தரருக்கு, ''தில்லை வாழந்தணர்'' சேக்கிழாருக்கு ''உலகெலாம்'' என்றும், மற்றும் வருவனவற்றாலறிக.

48. செந்தாமரைப் பிரமனும், வெண்டாமரைக் கலைமகளும், உலகில் ஆதிபகவனாக வந்தபோது பிறந்த ஏழு குழந்தைகளும், உடன் கூறிய அரிய கருத்துக்கள் தமிழ்க் கவியாகவே சொல்லிய சிறப்பையறிந்தவர்கள், ஏனைய மொழிக்குச் சிறப்பு எவ்விதம் கூறுவர்?

49. ஆத்தி, கொன்றை மலர்களையணிந்த பரமனை, அன்புடன் தமிழிற்பாடிய சுந்தர மூர்த்தியின் தோழரான பெருமையாலும், பொன்வண்ணத் தந்தாதி. ஞானவுலா இவற்றைப் பாடியதாலும், சுந்தரர் வெள்ளையானைமீது கயிலை சென்ற போது சேரமான் பெருமாள், தமது குதிரையேறி அவருடன் கயிலை சென்றார்.

50. ஔவையார், கயிலை செல்ல எண்ணி, விநாயக வழிபாட்டை விரைவிற் செய்தார். அமைதியாகச்செய் என்று சொல்லினர் கணபதி. சீதக்களப என்ற அகவல்பாடி, பூசையை முடித்தனர். தும்பிக்கையால் எடுத்து, சேரமான், சுந்தரர் என்ற இருவருக்கும் முன்னமே கயிலையில் இருக்க விடுத்தனர். கணபதியினருளைத் தமிழே கொடுத்தது என்க.

கவுணியன் அச்சகம், 169, பிராட்வே, சென்னை-108.